அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஸ்ரீஜக³த்³கு³ருக்³ரந்த²மாலா

# ॥ यतिपञ्चकम् ॥

# யதி பஞ்சகம்

ஸ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்.
1962



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

## பதிப்புரை

ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சாரதா பீடாதிபதிகளின் அனுக்ரஹத்திஞல் அமைக்கப்பட்ட அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் முக்கிய நோக்கம் ஸ்ரீ பகவத்பாதாளின் க்ரந்தங்களை அநுவாதத்துடன் பிரசுரித்து குறைந்த விலையில் எல் லோருக்கும் கிடைக்கும்படி செய்து ஆசார்யாளுடைய உபதேசங்களை எங்கும் பரவ ச்செய்வதே. இந்நோக்கத்துடன் பிரசுரிக்கப்படும் "**ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா**" வின் '**யதி பஞ்சகம்**' இது.

இவை தமிழ் அநுவாதத்துடனும் விரிவுடையுடனும் யாவருக்கும் உபயோகப் படும் வகையில் ஸமிதியால் வெளியிடப்பட்டிருக்கிறது.

இதைப் படிப்பதன்மூலம் ஸ்ரீ பகவத்பாதாளுடைய உபதேசங்களை மனதில் பதிய வைத்து அனுபவத்தில் கைக்கொண்டு சிரேயஸ்ஸையடையக் கோருகிறேன்.

**K.V. சுப்பரத்னம்**,
பொதுக் காரியதரிசி,
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.

உ
॥ श्रीः ॥
॥ ஸ்ரீ: ॥

# ॥ यतिपञ्चकम् ॥

# யதி பஞ்சகம்

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

[ஸத்குருவின் உபதேசத்தால் ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைந்த ஞானிகளான யதிகளின் மஹாபாக்யத்தைப்பற்றி வியந்து, அவர்கள் ஜீவன்முக்த நிலையில் உலகில் இருக்கும் விதத்தை ஐந்து சுலோகங்களால் விளக்குகிறது யதிபஞ்சகம் என்னும் இந்த பிரகரணம்.]

**वेदान्तवाक्येषु सदा रमन्तो भिक्षान्नमात्रेण च तुष्टिमन्तः ।**
**विशोकमन्तःकरणे स्मरन्तः कौपीनवन्तः खलु भाग्यवन्तः ॥ १ ॥**

**வேதா³ந்தவாக்யேஷு ஸதா³ ரமந்தோ பி⁴க்ஷான்னமாத்ரேண ச துஷ்டிமந்த꞉ ।**
**விஶோகமந்த꞉கரணே ஸ்மரந்த꞉ கௌபீனவந்த꞉ க²லு பா⁴க்³யவந்த꞉ ॥ 1 ॥**

**वेदान्तवाक्येषु** = உபநிஷத்துக்களிலுள்ள வாக்யங்களில்,
**வேதா³ந்தவாக்யேஷு**
**सदा** = எப்பொழுதும்,
**ஸதா³**
**रमन्तः** = ஆனந்தம் அடைபவர்களும்,
**ரமந்த꞉**
**भिक्षान्नमात्रेण** = பிக்ஷையில் கிடைக்கும் ஆஹாரத்தினாலேயே,
**பி⁴க்ஷான்னமாத்ரேண**
**तुष्टिमन्तः** = ஸந்தோஷப் படுபவர்களும்,
**துஷ்டிமந்த꞉**
**अन्तःकरणे** = மனதில்,
**அந்த꞉கரணே**
**विशोकं** = சோகமற்றதாக உபநிஷத்தில் கூறப்பட்ட
**விஶோகம்** ஆத்ம வஸ்துவை,
**स्मरन्तः** = நினைப்பவர்களுமான,
**ஸ்மரந்த꞉**
**कौपीनवन्तः** = கௌபீனவான்களான யதிகள்,
**கௌபீனவந்த꞉**

**भाग्यवन्तः** = மிகுந்த பாக்யசாலிகள்.

**பா⁴க்³யவந்தஃ**

ஸர்வஸங்கபரித்யாகம் செய்து ஸந்யாஸாச்ரம ஸ்வீகாரம் செய்துகொண்டு ஸத்குருவின் உபதேசத்தால் ஆத்மஸாக்ஷாத்காரம் பெற்று, அந்த அநுபவத்துடன் ஸஞ்சரிக்கும் ஜீவன்முக்தர்கள்தான் உலகில் பாக்யம் பெற்றவர்கள். அவர்களிடம் கௌபீனம் என்னும் கந்தையைத் தவிற வேறு ஒரு பொருளும் இருக்காது. ஒன்றையும் தன்னுடையதாக எண்ணமாட்டார்கள். ஒரு பொருளிலும் அபிமானம் இல்லாததாலும், கௌபீனத்தைத் தவிற வேறு ஒன்றையும் வைத்துக்கொள்ளாததாலும் பரமஹம்ஸர்களான யதிகளைத்தான் 'கௌபீநவந்த:' என்ற பதம் குறிப்பிடுகிறது. அதனால் தான் 'யதிபஞ்சகம்' என்று இதற்குப் பெயர். ஏற்பட்டிருக்கிறது. உபநிஷத் வாக்யங்களைத் தவிற வேறு ஒன்றும் பேசமாட்டார்கள். சோகம் அற்றதான ஆனந்தரூபமான ப்ரஹ்மஸ்வரூபத்தையே எப்பொழுதும் தியானம் செய்து கொண்டிருப்பார்கள். ஆனாலும் பிராரப்த கர்மாதீனமாக, சரீரம் இருப்பதால் அதன் ஸ்வபாவத்தை ஒட்டி மற்றவர்களுக்குப்போல் அவர்களுக்கும் பசி ஏற்படலாம். அச்சமயம் பிக்ஷை எடுத்து அதில் கிடைத்த அன்னத்தாலேயே ஸந்தோஷம் அடைவார்கள். இவர்களே மிகுந்த பாக்யமுள்ளவர்கள். **(1)**

## मूलं तरोः केवलमाश्रयन्तः पाणिद्वयं भोक्तुममत्रयन्तः ।
## कन्थामिव श्रीमपि कुत्सयन्तः कौपीनवन्तः खलु भाग्यवन्तः ॥ २ ॥

**மூலம் தரோஃ கேவலமாஶ்ரயந்தஃ பாணித்³வயம் போ⁴க்துமமத்ரயந்தஃ ।**
**கந்தா²மிவ ஶ்ரீமபி குத்ஸயந்தஃ கௌபீனவந்தஃ க²லு பா⁴க்³யவந்தஃ ॥ 2 ॥**

**तरोः** = மரத்தின்,

**தரோஃ**

**मूलं केवलं** = அடியை மட்டும்,

**மூலம் கேவலம்**

**आश्रयन्तः** = இருப்பிடமாகக் கொண்டவர்களும்,

**ஆஶ்ரயந்தஃ**

**पाणिद्वयं** = இரு கைகளையும்,

**பாணித்³வயம்**

**भोक्तुं** = சாப்பிடுவதற்கு,

**போ⁴க்தும்**

**अमत्रयन्तः** = பாத்திரமாகக் கொண்டவர்களும்,

**அமத்ரயந்தஃ**

**कन्थामिव** = கந்தையைப் போல,

**கந்தா²மிவ**

| | | |
|---|---|---|
| **श्रीमपि** <br> **ஶ்ரீமபி** | = | செல்வத்தையும், |
| **कुत्सयन्तः** <br> **குத்ஸயந்த꞉** | = | வெறுக்கிறவர்களுமான, |
| **कौपीनवन्तः** <br> **கௌபீனவந்த꞉** | = | கௌபீனம் மட்டும் தரித்த யதிகள், |
| **भाग्यवन्तः** <br> **பா⁴க்³யவந்த꞉** | = | பாக்யசாலிகள். |

ஞானிகளுக்கு சரீராபிமானம் இல்லாததால் மரத்தின் அடியிலேயே படுத்துத் தூங்குவார்கள். சரீர ஸௌக்யத்திற்காக பிற இடம் தேடிச்செல்லமாட்டார்கள். கையிலேயே பிக்ஷன்னத்தை வாங்கி உட்கொள்வார்கள். அதற்காக இலையையோ, வேறு பாத்திரத்தையோ வேண்டமாட்டார்கள். தெருவில் கிடக்கும் கிழிந்த கந்தல் துணியைக் கண்டு எல்லோரும் அதை வேண்டாமல் வெறுக்கின்றனர். அந்த கந்தையைப்போலவே உலகில் உள்ள எல்லா ஐசுவர்யங்களையும் வெறுப்பவர்கள் யதிகள். அவர்களுக்கு ஒன்றிலும் அபிமானம் இருக்காது. (2)

**देहादिभावं परिमार्जयन्त आत्मानमात्मन्यवलोकयन्तः ।**
**नान्तर्न मध्यं न बहिः स्मरन्तः कौपीनवन्तः खलु भाग्यवन्तः ॥ ३ ॥**

**தே³ஹாதி³பா⁴வம் பரிமார்ஜயந்த ஆத்மானமாத்மன்யவலோகயந்த꞉ ।**
**நாந்தர்ன மத்⁴யம் ந ப³ஹி꞉ ஸ்மரந்த꞉ கௌபீனவந்த꞉ க²லு பா⁴க்³யவந்த꞉ ॥ 3 ॥**

| | | |
|---|---|---|
| **देहादिभावं** <br> **தே³ஹாதி³பா⁴வம்** | = | சரீரம் முதலியவைகளின் தன்மையை, |
| **परिमार्जयन्त** <br> **பரிமார்ஜயந்த** | = | நன்கு முழுவதும் துடைத்து போக்கிக் கொண்டவர்களும், |
| **आत्मनि** <br> **ஆத்மனி** | = | மனதில், |
| **आत्मानं** <br> **ஆத்மானம்** | = | ஆத்ம வஸ்துவை, |
| **अवलोकयन्तः** <br> **அவலோகயந்த꞉** | = | பார்க்கின்றவர்களும், |
| **अन्तः** <br> **அந்த꞉** | = | உள்ளேயும், |
| **मध्यं** <br> **மத்⁴யம்** | = | நடுவையும், |
| **बहिः** <br> **ப³ஹி꞉** | = | வெளியிலும், |

**न स्मरन्तः** = நினைக்காதவர்களுமான,

**ந ஸ்மரந்த:**

**कौपीनवन्तः** = யதிகள்,

**கௌபீனவந்த:**

**भाग्यवन्तः** = பாக்யசாலிகள்.

**பா4க்3யவந்த:**

நாம் ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாமல் தேஹாதிகளில் அபிமானம்கொண்டு அவைகளை 'நான்' என்று எண்ணுகிறோம். நாம் தேஹமாகவே இருக்கிறோம். பரிசுத்தமான ஆத்மாவுக்கு இந்த தேஹத்தன்மை என்ற அழுக்கு ஏற்பட்டிருக்கிறது. யதிகள் ஞானம் என்ற சுத்த ஜலத்தால் அழுக்கைப் போக்கிக் கொண்டுவிட்டனர். ஒரு பொழுதும் தேஹாதிகளை நான் என எண்ணமாட்டார்கள். ஆத்மாவையே தன் ஸ்வரூபமாக நேரில் பார்த்துக்கொண்டிருப்பார்கள். ஆத்மாவை த்தவிற வேறு ஒன்றையும் உள்ளே இருந்தாலும் வெளியே இருந்தாலும் நடுவில் இருந்தாலும் நினைத்துப்பார்க்கமாட்டார்கள். **(3)**

**स्वानन्दभावे परितुष्टिमन्तः संशान्तसर्वेन्द्रियदृष्टिमन्तः ।**
**अहर्निशं ब्रह्मणि ये रमन्तः कौपीनवन्तः खलु भाग्यवन्तः ॥ ४ ॥**

**ஸ்வானந்த3பா4வே பரிதுஷ்டிமந்த: ஸம்ஶாந்தஸர்வேந்த்3ரியத்3ருஷ்டிமந்த: ।**
**அஹர்நிஶம் ப்3ரஹ்மணி யே ரமந்த: கௌபீனவந்த: க2லு பா4க்3யவந்த: ॥ 4 ॥**

**ये** = எவர்கள்,

**யே**

**स्वानन्दभावे** = ஆத்மானந்த ஸ்வரூபத்தில்,

**ஸ்வானந்த3பா4வே**

**परितुष्टिमन्तः** = ஸந்தோஷம் அடைபவர்களும்,

**பரிதுஷ்டிமந்த:**

**संशान्तसर्वेन्द्रियदृष्टिमन्तः** = எல்லா இந்திரியங்களின் அறிவும்

**ஸம்ஶாந்தஸர்வேந்த்3ரியத்3ருஷ்டிமந்த:** அடங்கியவர்களும்,

**अहर्निशं** = இரவும் பகலும்,

**அஹர்நிஶம்**

**ब्रह्मणि** = ப்ரஹ்மத்தில்,

**ப்3ரஹ்மணி**

**रमन्तः** = இன்புறுகின்றவர்களுமாக (இருக்கின்றனரோ,

**ரமந்த:** அந்த)

**कौपीनवन्तः** = யதிகள்,

**கௌபீனவந்த:**

**भाग्यवन्तः** = பாக்யசாலிகள்.

**பா⁴க்³யவந்த:**

ஆத்மா ஆனந்தரூபம். இதைத்தெரிந்து கொள்ளாததால் ஆனந்தம் அடைய வெளிப்பொருள்களைத் தேடிச் செல்கிறோம். ஆத்மானந்தத்தை அறிந்துகொண்ட ஞானிகள் அதிலேயே ஸந்தோஷப்படுவார்கள். வெளிப்பொருள்களைத் தேடிச் செல்லமாட்டார்கள். கண் காது முதலான இந்திரியங்களையும், மனதையும் அதன் போக்குப்படிவிட்டு வெளி விஷயங்களை அறிந்து கொண்டிருக்கிறபடியால்தான் ஆத்மானந்தம் தெரிவதில்லை. ஞானிகள் வெளி விஷயங்களில் போகமுடியாதபடி இந்திரியங்களையும் மனதையும் அடக்கிவிடுவார்கள். அப்பொழுது ப்ரஹ்ம ஸ்வரூபம் பிரகாசிக்கும். அதிலேயே ஆனந்தம் அடைவார்கள். **(4)**

## पञ्चाक्षरं पावनमुच्चरन्तः पतिं पशूनां हृदि भावयन्तः ।
## भिक्षाशना दिक्षु परिभ्रमन्तः कौपीनवन्तः खलु भाग्यवन्तः ॥ ५ ॥

**பஞ்சாக்ஷரம் பாவனமுச்சரந்த: பதிம் பஶூனாம் ஹ்ருதி³ பா⁴வயந்த: ।**
**பி⁴க்ஷாஶனா தி³க்ஷு பரிப்⁴ரமந்த: கௌபீனவந்த: க²லு பா⁴க்³யவந்த: ॥ 5 ॥**

**पावनं** = பரிசுத்தியைக் கொடுக்கும்,

**பாவனம்**

**पञ्चाक्षरं** = பஞ்சாக்ஷர மந்திரத்தை,

**பஞ்சாக்ஷரம்**

**उच्चरन्तः** = ஜபித்துக்கொண்டும்,

**உச்சரந்த:**

**हृदि** = மனதில்,

**ஹ்ருதி³**

**पशूनां पतिं** = பசுபதியான பரமேசுவரனை,

**பஶூனாம் பதிம்**

**भावयन्तः** = தியானம் செய்துகொண்டும்,

**பா⁴வயந்த:**

**भिक्षाशना** = பிக்ஷை எடுத்துக்கிடைக்கும் அன்னத்தை உண்பவர்களாய்,

**பி⁴க்ஷாஶனா**

**दिक्षु** = திசைகள் எங்கும்,

**தி³க்ஷு**

**परिभ्रमन्तः** = சுற்றிக்கொண்டும் இருக்கிற,

**பரிப்⁴ரமந்த:**

**कौपीनवन्तः** = யதிகள்,

**கௌபீனவந்த:**

**भाग्यवन्त:** = மிகுந்த பாக்யசாலிகள்.

**பா$^{4}$க்$^{3}$யவந்த꞉**

வாக்கில் பஞ்சாக்ஷர மந்திர ஜபமும், மனதில் ஈசுவர தியானமும் செய்து கொண்டும் பிக்ஷான்னத்தாலேயே பசியை தீர்த்துக்கொண்டும் ஓரிடத்திலும் நிலைத்து நிற்காமல் எங்கும் ஸஞ்சாரம் செய்து வருகின்ற யதிகள்தான் இவ்வுலகில் எல்லோரையும்விட மிகுந்த பாக்யசாலிகள். **(5)**

## யதி பஞ்சகம் முற்றிற்று.